

சற்குருப்யோ நம:

# ஸ்ரீ நிஜ குண யோகீஸ்வரர்

கன்னட பாஷையில் அருளிச் செய்த

விவேக சிந்தாமணியில்

வேதாந்தப் பரிச்சேத மென்னும்

# வேதாந்த சூடாமணி.



இது

நல்லாற்றூர் துறை மங்கலம்

ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளால்

மொழிபெயர்த்தருளப்பட்டு



திருப்பூவண மடாதிபதி

ஸ்ரீ காசிகர்நந்த ஞாநாசார்ய சுவாமிகளாலும்

ஸ்ரீ. க. சிவ. மடாலயம் குருசுவாமிகளாலும்

அச்சியற்றப் பெற்றது.



## சிறப்புப் பாயிரம்.

அருமறையின் பொருடெரித்த விவேக
சிந்தா மணியதனு ளறை வேதாந்தப்,
பொருளினைமுந் நீர்வரைப்பி னுலகறியச்
செந்தமிழாற் புனைதல் செய்தான், பெருகு
சுவை நறவொழுகு செஞ்சொன்மல ராற்
புனைபாப் பெருந்தண் மாலைக், கருமிடற்று
வானவற்கே சாத்து சிவப் பிரகாசன் கவி
ஞர் வேந்தே.

சற்குருப்யோ நம:

# வேதாந்த சூடாமணி.

தருணமா துமைமுகத் தாம ரைக்கெழு
மருணறு மெனவுதித் தடியர் பாற்புரி
கருணைமா மதமெனக் காட்டு மாமுகன்
சரணவா ரிசமலர் தலையிற் கொள்ளுவாம். 1

சீர்கொண்ட வருமறையின் முடிமணி
யைத் தெய்வ சிகாமணியை யடியவர்தங்
கண்மணியை மாயைய், பேர்கொண்ட விரு
ளிரிக்குந் திநமணியை முக்கட் பெருமணி
யை யகத்தினுக்கோர் விளக்காக விருத்தி,
யேர்கொண்ட விவேகசிந்தா மணியெனு நூ
லதனு ளெடுத்தியம்பும் வேதாந்தப் பரிச்சே
தப் பொருளை, நேர்கொண்ட தமிழ்விருத்த
யாப்பதனுற் றெரிய நிகழ்த்துவன்வே தாந்
தசூ டாமணியென் றன்றே. 2

பாயிரம்—முற்றிற்று.

## நூல்.

வேதமொரு நான்குமா றங்கமுநன்
னியாயமீ மாஞ்சையொடுமிருதி புராணமு
மீரேழா, வோதலுறும் வித்தைகளா மவற்
றுண்மீ மாஞ்சை யுயர்ந்ததா யைந்நான் கத்
தியாயமா யருத்த, பேதமுற விருகூறு மவ
ற்றுண்முதற் கூறே பிறங்குமருட் சைமினி
சூத் திரரூப மாகிப், போதுமீரா றத்தியா
யங்களாய்ச் கருமப் பொருளுணர்த்திப் பூரு
வமீ மாஞ்சையெனப் படுமால். 1

சாற்றியவச் சைமினிசூத் திரத்திற்கு
மிக்க சாபரமென் றொருபா டியம்புரியப்
பட்ட, தேற்றமிகு மம்மீமாஞ் சைக்குமதம்
பாட்ட மெனவொன்று பட்டாசா ரியனால்
வந் தன்று, போற்றுமவன் சீடனா இயபிரபா
கரனாற் புகழ்பிரபாகரமெனவோர் மதாந்தர
நன் கமைய, வாற்றியவச் சாபரபா டியமதற்
கு விளங்க வாக்கப்பட் டுலகமெலா மறிந்
திட நின் றதுவே. 2



உரைத்தவிரண் டாங்கூறு பிரமமுறை
ப்பதனா லுத்தரமீ மாஞ்சையெனப் பட்ட
ருள் கூர்வியாதன், றெரித்தசூத் திரவடி
வ மாகியிரு நான்கத் தியாயமா மவற்றுண்
முத னான்கத்தி யாயம், விரித்தலுறு தே
வதந காண்டமெனப் பட்டுவிளங்குறுதெய்
வதவிலக் கணம்பலபத் திரனா, னிரைத்து
ரைசெய் யப்படுமே னான்கத்தி யாய நிகழ்
பிரம காண்டமென வேநிசழ்த்தப் படுமால்.

அப்பிரம காண்டத்துட் சிவமொடியி
ரயிக்கமறைதலாற் சங்கரா சாரியனுங் குரு
வா, லொப்பரிய பாடிய மொன் றுரைக்கப்
பட்டதுபின் னுரைத்ததற்கு விலரணசா
ரியனென் பவனாற், செப்பரிய விவரணமாக்
குறப்பட்ட ததுவே தெரியின்வே தாந்தநூ
லென்றுரைக்கப் படுமோ, லிப்பெரிய வேதா
ந்த நூற்பொருளி னகல மெங்ஙனமென்
றிடினுரைத்து மியம்பிய நூன் முறையே. 4

வாய்த்தநூன் முகத்துரைக்கு மங்களா
சரணை வாழ்த்துவணக் கொடுவத்து நிர்த்

தேச மெனமூன், ருத்தபதம் பதப்பொரு ளே வாக்கியயோ சனேயே யறிவினு விடை யிவை யைந் துறையினிலக் கணமாங் கோத் துரைசெய் விசேடவிசே டியங்கருத்தா கருமங் கொள்கிரியை யிவையந்து வயவி லக் கணமாஞ், சாற்றுமநு பந்தசதுட் டய நூற்கு விடயஞ் சம்பந்தம் பயனதிகா ரிக ளென நான் கறியே. 5

விடயமது சிவசீவர் தமதேகத் துவமாம் விமலனொடு நூற்கறையப் படலறையுந் தன் மை, யடைதலுறு சம்பந்தம் பயன்றுய ரெ லாநீத் தாநந்தப் பதம்பெறுதல் சாதநநான் கினேயு,முடையவனே யதிகாரி யென்றறை வ ரறிஞு ருரைத்தசா தநசதுட் டயநித்த வநித்தப், படுபொருளின் விவேகமிக பர போக விராகம் பழிப்பரிய சமைமுமூட் சுத் வமெனப் படுமொல். 6

நித்தியமாந் மாவே பொய் விடயமெ லா மெனத்தேர் நிலைதருநித் தியாநித் திய வத்து விவேக, மெத்திவரு மிகமொடமுத்



தாத்தில்வரு போக விராகமிம்மை மறுமை யுள விடயநுகர் வனைத்தும், பொய்த்தழியு மிடும்பைமய மெனவிடுத லாகும் புகழ்சமை யே முதலாய சட்குணங்கள் பெறுதல், வைத்த சமை யியல்பாய முத்திவிருப் பதுவே வயங்குமுமூட் சுத்துவமென் றறிந் திடுக மதித்தே. 7

சமைதமைவையே திதீக்கையுப ரதிசிரத் தை சமாதி சமைமுதலா மறுகுணங்க ளுட் கரண மடக்கல், சமைதமைதான் புறக் கரண மடக்குதல் காமாதி தணித்திடுகை திதீக்கை கரு மங்களனைத் தினேயுஞ், சுமையெனவே விடுதலுப ரதிசுருதி குரு வைத் துணிவினு னம்புமதே சிரத்தைகுரு மொழிநெஞ், சமை வுறவே திட்பமுறல் சமாதியிச்சா தநஞ்சேரதிகாரி செய்யுங்குரு சே வையினையெடுத் தியம்பில். 8

ஆத்தமுட னங்கமே தாநஞ்சற் பாவமா மவற்றுட் குருபரனுக் கநுகூல விருத்தி, யா த்தமுயர் குருபான்குற் றேவலே யங்க மரு

ட்குரவர்க்குரியமனை நிலமுதலா மவற்றைக்
காத்தலது தாநமாஞ் சற்குருவே மெய்யாக்
கண்டசிவ மெனநம்பு மதுவேசர் பாவ, மே
த்துகரு மம்பத்தி மிகுஞாந காண்ட மெனு
மிவற்றான் மூவதிகா ரிகள்வேறு முளரால்.

உடம்பினையும் வருகுடும்பந் தனையு
மியா னெனதென் றுளன்கரும காண்டியெ
லாக் கிரியையுமீ சற்கே, திடம்பெறநின் று
க்குமவனேபத்தி காண்டி செயுங்கரும மனை
த்தினுக்குங் கரிதானென் றிருப்போன்,
மடந்தவிரு நன்ஞாந காண்டியென லாகு ம
ற்றுமுள ரைவரொரு வர்க்கொருவ ருய
ர்வா, யடைந்தவதி காரிகளங் கவர்கருமி மு
முட்சோ டறையுமப் பியாசியநு பவியுடனா
ரூடன். 10

மூடமொடு தன்சாதி கருமமே பற்றி
முத்தனா மவனா றுபிணிறப்பிலொண் கருமி,
நீடுலக மின்மையென நினைந்துபுறக் கரும
நிட்டனாய் முப்பிறப்பின் முத்தனா மவனே,
நாடரிய முமுட்சுலகங் கநவெனக்கண் டுள்



ள நற்கருமஞ் சேர்ந்துபிறப் பிரண்டுளனப்
பியாசி, வீடுலக விவகார நினையாமல் விவேக
மேவியோர் பிறப்பினான் முத்தனநு பவி
யே. 11

உலகநிலை தோன்றாமற் றன்றிகழ்ஞா
நத்தா லுண்மைமுத்த னாமவனே யாரூடன்
மற்று, முலகமுதல் யாதெனத்தேர் வொடு
குருவை யடைந்து முடம்பாதி பொய்யெ
னக்கண் டருட்குருவை யடைந்து, முலகி
லொரு குரவன்றன் மகற்குபதே சஞ்செய்
துறக்கேட்டு முயர்தருஞா நிகளாகி முத்
தி, யுலகுதொழு விவேகமொடு விரத்தி
தெய்வ கதிபா லுற்றிடுவோர் மூவரதி காரி
சளா குவரால். 12

சாதகர்களாஞ்சீடர் பேதத்தாற் குரவர்
தாமும்போ தககுருவே முதலாக விருநாற்
பேதமடை குவரவருட் போதகன்முன் னா
விற் பெரும்பொருள்கூ றிடுபவன்றத் துவங்
திகழ்த்து பவனே, வேதகனல் வகியாதி யா
லிம்மை யின்பம் வெந்துயரங்குதவுமவ னிசி

தகுரு வறத்தைப், போதகஞ்செய் திருமை யினு மின்பமருள் பவனே புகழ்தருகா மிய குருவென் றறைகுவர்மூ தறிஞர். 13

சூசகனும் விவேகத்தாற் சமைமுதலாங் குணங்க டொகுப்பவன்பொய் விடயமென வாங்மவிருப் பருள்வோன், வாசகனுஞ் சிவ சீவ ரயிக்கியஞா நத்தை வழங்குமவன் கார கனே யந்தவிர்த்து நிலைத்த, வாசகனு முத்தி யருள் பவன்விகித குருவா மதிகா ரிகளாகு மெனமுன்னர்க் கூறு, நேசமுறு சீடர்தம்மு ளொருவன்முத் தாப நெருப்பினுல் வெந்து சிந்தா குலமுடைய னுகி. 14

நானுரிப் பவமெனக்கு வந்தவா றென் கொ னசிப்பதெவ ராலெனவாய்ந் தலர்கரங் கொண் டேகி, யானுநற் கல்வியறி வடக்கம் வை ராக மாதியாங் குணமுடைச்சற் குரு வையடைந் ததிர்மண், ணூனுரப் பணிந் தெழுந்தன் பாற்கரங்கள் குவித்தே யுறவழு த்தி யருட்குருவே யென்பாச தொழிவு, தானுமெத்திறத்தினு லெனவினவல் சீடன் றனதுவிதி வத்துபசந் நத்துவமா மன்றே.



அனையவன ததிகாரந் தெரிந்தருளா னேக்கியஞ்சலோம்பென்றபய காஞ்சிரத்தி லிருத்திப், புனையவருஞ் சுருதியுத்தி யால வன தநாங்ம புத்தியினை யொழித்துத்தா தாங்மியவாக்கியத்தா, னினையலரு மொரு பிரம நீயேயென் றுள்ள நிலையையுணர்த் துதல்குரவ னுபதேசமாகு, மினையவுபதே முறையுத்தேசத் துடனே யிலக்கணஞ்சோ தனையெனுமூன் றினையுமுடைத் தாமால்.

அறியவுணர்த் துறுபொருளை நாமாத் திரத்தா லறைந்திடுத லுத்தேசமாங்களகம் பளமாங், குறியுடைய தானெனல்போ லப் பொருளிற் சிறந்த குறியுரைத்த விலக்கண மவ் விலக்கியமாம் பொளிற், செறிவுறு மவ் விலக்கணமுண் டோவிலையோ வென் னத் தெரிந்திடுதல் பரிட்சையோர் பொரு ளறிந்து பெறற்குப், பொறியுறல்செய் காட் சியா மளவைமுத லாகப் பொருந்துபிர மாணங்க ளெட்டுளவா மன்றே. 17

கடமுதலா மவற்றினது காண்கை தா
னே காட்சிபுகை யாலங்கி ஞானமநு மாநந்,
திடமருவு மவ்வநுமா நம்பதிஞை யேது
திட்டாந்த மெனுமங்க முடைத்தவற்றுட்
பதிஞை, யிடமலைவெவ் வழலுடைத்தென்
பதுபுகையுண் மையினு லெனலேது மடைப்
பளிபோ லென்பதுதிட் டாந்த, முடைமை
யுண ராத்தனுரை யானதிதீ ராதி யுறுகனி
யா திகளுண்மை ஞாநமா கமமாம். 18

பகற்பொழுதுண் ணுனொருவ னிளை
யாமை கண்டு பரிந்திரவூண்கற்பித்தல் கா
ணருத்தாபத்தி, யகத்தினிலை யுறுதேவ த
த்த னெனி லிருப்பனவன்வேறூ ரிடத்தி
லெனத்தெரிந்திடுத றன்னைத், தகப்பெரி
யர் கேள்வியருத் தாபத்தியென்பர் தகும்ப
சுவோ டொக்குமரை யெனுமொழிகேட் டி
ருந்தோரன், புகப்படரும் வநத்திலதன் விட
யஞா நந்தான் பொருந்துதலேயுவமானப் பி
ரமாண மாகும். 19

இங்கிலனிற் கடமில்லை யென்பதனுற்
றேன்றுமின்மையுணர் வபாவமா மாயிரமா



கியவெண், டன்னிலொரு நூறெனுமெண்
ணுண்டெனுஞா நந்தான் சம்பவமா மிம்ம
ரத்தி னியக்கனுள னென்னுஞ், சொன்னி
கழ்வில் வருமியக்க விடயவுணர் வதனைச்
சொற்றிடுவ ரறிஞரை திகமாகு மளவை,
யென்னவவண் டொகுத்துரைத்த காட்சி
முத லாய வெண்வகையிற் சமயர்கொள
லின்னவென வுரைப்பாம். 20

புகலுகா யுதனுக்குக் காட்சியொன்
றேசைந புத்தவைசே டியர்கடமக் கிரண்ட
னுமா நத்தோ, டிகலருஞ்சாங் கியர்க்குமூன்
றுரையொடுநான் குவமை யொடுநியாயர்க்
கருத்தாபத்தியொடைந் தாகு, மிகுபிரபாக
ரற்காறு மபாவமொடு பாட்ட வேதாந்தி கட்
காகு மெனவறிக தெரிவுற், றிகலருமொண்
புராணிகர்க டமக்களவை யெட்டா மென்
றுரைப்பர் சம்பவவை திகங்களுட னன்றே.

திருந்தியவே தாந்தநூ லியம்புறுவ தி
ருக்குத் திருசியமென் றிருபொருளங் கவற்
றின்முதற் றிருக்கில், வறைந்திடுவ சுவகதந்

தன் சாதிவிசா திகளா மற்றவைமூன் றினு
க்குமுதா ரணமுறையே மொழியில், விரிந்
தநிழ றருநெடும்பூம் பனைமரமொன் றிற்கு
ஞிமிறினங்கள் புக்குமுகத் துழுதுபெரு கு
றுதே, னருந்துநறு மலர்முதலா யினவும்
வேறுள்ள வணிமரமுங் கன்முதலா யின
வும்போலாமால். 22

நிரவயவ மாதலினு னுஞ்சத்து வேறு
நிகழாமை யானுமிறை தனக்குமுத னடுவி
ன், றொருவுறுக விவ்வுலககாரணமா மாயை
யுண்மையினு னிறு’ திய தி லென்பதென்கொ
லென்னில், வரைவுதருசித்திரிகன் சித்திர
சத் தியைப்போன் மாயையுஞ்சந் மாந்திர
மாம் பிரமத்தின் வேறாய்த், தெரிவதிலா
மையினென்றுஞ் சச்சிதா நந்த சிவத்தினு
க்குவிசாதியிலையென் றுணர்கதெரிந்தே.!)

சுருதியினு ளேகமே வாத்துவித மெ
ன்னுஞ்சொற்கிடையு ளேகமெனுஞ் சொல்
லதனுக் கயிக்க, மரிதிலுண ரேவவேனு
மிடைச்சொற்குத் தேற்றமத்துவித மெனு



மொழிக்குத் துவிதவிலக் காகக், கருதுபொ
ருள் வருதலினு விம்முறையே மாயா கற்
பனைகள் கடந்துநிரவயமாகி யென்றுந், திரி
தவில்சிந் மயமாகு மொருபிரமந் தனக்குத்
தெரித்தசுவ கதமுதலா யினமூன்று மிலை
யே. 24

அத்தியா ரோபமப வாதமென விரண்
டா யறைகுவர்கற் பிதமத்தி யாரோப முள்
ள, சுத்தியூடிலாதவிர சதம்விளைத்தல் போ
லச் சொல்பிரம சத்தினில்லா வுலகதுகற்
பித்த, லெய்த்திதுதான் வெள்ளியதன் றிப்
பியெனல் போலோர்ந் திறைமெய்பொய்
யுலகமெனத் தெளிதலப வாத, மெய்த்த
பொருளறியுமிலக் கணமூன்று மவைதாம்
விளங்கதத்து வாவிருத்தி தடத்தமொடு
சொரூபம். 25

ஆகமுத லனநியதி செய்து நின்ற வா
ருயிரை யறிவித்த லதத்துவா விருத்தி, சா
கைநுனி மதியுளதென் றுணர்த்தலிற்பூ தா
திசகமாய காரணங்கொண் டறிவுணர்த்தல்

தடத்த, மாகனலி விளங்குகதர்ச் சொருப
னெனல் போலாங் மாவினிச சொருபமிது
வெனவுணர்த்தல் சொருப, நீகடவு சொ
ருபநிசஞ் சச்சிதா நந்தநித்தியம்பூ ரணமாக
நீகினைந்து கொள்ளே. 26

மதித்தன்மதி யாமைநன வாதிகளிற்
றனக்கோர் வாதையிலா துண்டெனல்சத்
தவத்தையனைத் தினுமே, யுத்தவிட யங்
களைநின் றறிந்திடுதல் சித்தா முவப்பினுக்கு
விடயமாந் தன்மையா நந்தந், திதித்தசசோ
திதசித்த மனைத்துஞ்சா தகமாந் திறத்தி
னா லனைத்தினுஞ்சம் பந்தநிறை வெனவே,
விதித்திடுகெ வுயிர்சச்சி தாநந்த மயமேல்
விளங்கியதி லவற்றுளா நந்தமெங்கு மெ
ளினே. 27

வெம்மையொளி யுருவாய வழல்விள
க்கி னொளியே விளங்கியிடும் புனலிடத்தின்
வெம்மையே விரியும், வெம்மையொளி யிர
ண்டுமெழும் விறகினிலவ் வகைபோல் விம
லசத்தொன் றேதிகழுங் கன்முதலா மவற்



றின், மெய்ம்மைதவிர் புத்தியது தமோகு
ணத்தின் மூட விருத்தியினு மிராசதத்தி
ன் கோரவிருத் தியினு, மெய்ம்மயசச் சித்
தாகுஞ் சத்துவத்திற் சாந்த விருத்தியினிற்
சச்சிதா நந்தங்க டோன்றும். 28

ஆதலினா லாநந்த மயமாமாங் மாவவ்
வைந்தினுக்கு முபாதியுள வவைமுறையே
மொழியிற், பேதமுறுஞ் சத்துமூன் றாம்வி
வகா ரிகம்பின் பிராதிபா திகம்பார மார்த்தி
கசத் தெனவே, மூதுணர்விற் சுழுத்தியிற்
றோன் றாதுநன வுற்று முத்தியுறு மளவு
முறுங் கடாதிமுத லதுவாம், போதுகந
வினிற்றோன்றி யழிவதிடை யதுவாம்பொ
ன்றாத பிரமசத்தே யிறுதியதா மன்றே.

சீவனொடு சன்கூடத் தன்பிரம மென்
ணச் சித்துநான் காங்குடநீர் கதவுறுவெண்
மீன்வான், றாவுபனி நீர்விம்ப வெனுமிதா
காசஞ் சொல்கடா வச்சிந்நா காசமொடு மா
வான், மேவுமிவை யவற்றினுக்குத் திட்டா
ந்த முறையாம் விடயமொடு பிரமம்வா சனை

முக்கி யம்பி, னேவுசிச வாங்மாவோ டத்
துவிதம் வித்தை யெனுமிவற்றின் பெயரா
லெண் வகைப்படுமா நந்தம். 30

மாத்துமுதல் விடயவூ தியங்கடமிற்
றோன்றி வரல்விடய வாநந்தங் கண்படை
யிற் றோன்ற, லோதுபிர மாநந்தந் துயிலொ
ழிவிற் றோற்ற முடையதுதான் வாசநா நந்
தங்கே டின்ப, மாதலிலா னொதுமன்மதி
தோன்றுதல்முக் கியமா மாநந்த மனோலய
யோ கத்தினில்வந் துதித்த, லேதமறு நிசா
நந்தம் பிரியவிட யத்து ளியான்பிரிய னெ
னத்தோன் றுதலாங்மா நந்தம். 31

விரியுமுல கனைத்தும்பொய் மெய்ம்
மைதா னென்னும் விவேகத்திற் றோன்று
வதே யத்துவிதா நந்த, மரியமறை முடிவா
கும் வாக்கியஞா நத்தா லாதலது வித்தியா
நந்தமென வறிக, வுரியனமுன் னின்மை
யொடுபின்னின்மை யின்றி *யொன்றோன்

* யொன்றினிலொன் றின்மையென்று
என்றும் பாடமுண்டு.



றா காமையென்று மின்மையென நான்கா
ய்த், திரியுமபா வங்களிவை நித்தியத்துட்
புகாத திறத்தனவாம் பூரணத்து முறு
தனமூன் றுகும். 32

உரைத்தவைதா மியாவையெனி னொரு
காலத் துண்டின் றொருகாலத் தெனுங்கால
பரிச்சேதமுடனே, தெரித்தவொரு தேயத்
துண் டொருதேயத் திலையென் றேயபரிச்
சேதமுமொன் றுமாகா தென்னுங், கருத்தி
ல்வரு வத்துபரிச் சேதமுமா மெனவே கரு
திடுகவினிச்சித் தின் விரிவாகு மெனமுன்,
விரித்திடுமேச் சீவாதி கட்குநாமா,தி விவகார
கற்பனையீண் டெடுத்துமொழி குதுமால்.

சாற்றரிய சீவபே தங்கண்முறை விசு
வன் றைசதன்பின் பிராஞ்ஞெனப்பகர்ந்
திடுவ ரவருள், வேற்றுமைசெய் தூலவுடல்
வியட்டியபி மாநி விவகா ரிகன்புத்தி கது
வுறுசை தங்யன், மாற்றரிய சிதாபாசன் வி
ட்சேப ரூபன் வருபிரமாத் துருநுவல்கத்
துருவொடுபோத் துருவே, தோற்றியிடும்

விஞ்ஞாநமயன்குடும்பி சரீரி துவம்பதமுக்
கியன்முதலா யினவிசுவ நாமம். 34

பேற்றவொரு சூக்குமமெய் வியட்டி
யபி மாகி பிராதிபா திகசீவன் சொற்பக
கற் பிதனென், மற்றவைதான் முதலாய
தைசதன்றன் பெயராய் வழங்குறுவர் கா
ர்ணமெய் வியட்டியபி மாகி, யுற்றுவரு ம
வித்தையோ பகிதன்கா ரியமா முபாதிக
னென்பனமுதலாம் பிராஞ்ஞநா மங்கள்,
பற்றிவரு சீவாங்மா வந்தராங் மாமேற் பர
மாங்மா வெனப்படுமோங்மாவி தமூன் ருகும்.

காயந்துள விரும்பு போலுடம் பாதி
கலந்துறு குடும்பமென் வழக்கிற், சார்ந்து
ளன் சீவாங் மாவெனப் படுவான் ருமரை
யிலையினீர் போலத், தோய்ந்துள குடும்பப்
பெருவிவ காரங் தோய்விலனங்சராங் மாவா
ம், போந்துல கிறந்து பரிதிபோற் சான்ரு
ய்ப் பொருந்திஞேன் ருன்பர மாங்மா. 36

நீர்விழுங் தொருவெங் கதிர்தடு மாறி
னின்றதென் றுரைப்பது போலுங், கார்



விரைந்தோட வோடுகின்றது தண்கலைமதி
யென்பது போலு, மோர்வருந் திரிவிற்போ
தவாங் மாவிற் குடன்முத லாகிய வுபாதிப்,
பேர்வருஞ் சீவ பாவனை யுலகப் பெருவிவ
காரமென் றறியே. 37

ஆருவிராட் புருட னிரணிய கருப்ப
னந்தரி யாமியென் றீசன், றிரிவித மவருட்
டூலவா கத்துச் சமட்டியா கியவபி மாகி,
விரிவுறும் வைஶ்வா நரனென முதலாய்
விராட்புருடன்பெயராகு, மருவுறு மிலிங்க
மெனுமுடற் சமட்டி மாகிமாப் பிராணனே
யன்றி. 38

சூத்திராத் மிகனென் பெயர்முத லா
கச் சொற்றன ரிரணிய கருப்பற், கேத்து
கா ரணமா முடம்புறு சமட்டி யெனுமபி
மாகியவ் வியத்தன், வாய்த்தகா ரணமா
முபாதிக னங்த மயன்பர தேவதை பரம,
ஞுத்ததற் பதமுக் கியார்த்தனென் பெயர்
முனந்தரி யாமிபெற் றிடுமே. 39

சித்திர படமோர் பொருளொடுங்
கூடாத் திகழ்வினிற் றெளதமே யெனவு,

நெய்த்தகூழ் வருடக் கடிதமே யெனவு நீனி
றத் திலாஞ்சித மெனவும், பத்தியோ வியஞ்
சேர்ந் திரஞ்சித மெனவும் படுதல்போற் பிர
மமு மாயை, வைத்தகா ரியங்கள் கடந்துறு
நிலையில் வயங்குஞ்சித் தெனும்பெயர் புனைந்
தே. 40

அகிலகா ரணமா மாயையை மருவி யந்
தரி யாமியா மாயை, சகலகா ரியமாஞ் சூக்
கும வுடம்பு சார்ந்துபொன் கர்ப்பனென்
றாகி, விகலமி றூல வுடம்பினை மேவி விரா
ட்டென நிற்குமென் றறிவாய், திகழுறு பிர
மஞ் சித்திர படமேற் சித்திர மியாதென
வினவில். 41

விரிஞ்சனே முதலாஞ் சேதந மோடு
வெற்பெழு வாயசே தநமாய்ப், பரந்துள
வுளகஞ் சித்திர மென்பர் பரம்பொரு ளா
மொரு பிரமத், திருஞ்சடா சடமா முலகது
தோற்ற மெவ்வண மெனிற்படந் தன்னில்,
வரைந்தபன் னிறமாய்க் குளிர்முதன் மாற்ற
வல்லன வலதுகிற் போலி. 42



ஓர்வடி வாகிக் குளிர்முதன் மாற்று
முண்மையாஞ் சித்திர படம்போன், றார்வுற
வெழுதுங் கிரிமுத லாய வதனொடொப்
புறுகிலா வாபோற், றேர்வரும் பிரமத் தெ
ழுந்துபற் பலவாஞ் சீவர்கள் சித்தொடொப்
பாகப், பார்முத லொவ்வாச் சடங்களா தலி 43
னாற் பரத்திலாஞ் சடாசட வுலகம்.

இத்திறத் தீசன் முக்கிய குணங்களை
லாமறி தன்முத லனவாங், கத்துருத் துவ
மோ டகத்துருத் துவம்பி னன்னிதா கத்
துருத் துவமே, யத்தன்மெய்ப்பிரபுத் துவ
வலி யாக்க வளித்தல்போக் குதனிய மநந்
தா, னெய்த்திட லகற்று மநுப்பிர வேச 44
மென்பன வீசனைந் தொழிலே.

நீங்கிய விகாரப் பிரமமா மீச னிகழ்த்
துமோ தொழில்பல வென்னிற், பூங்கதி
ரிச்சை யின்றியே வாரி பொழிமழைக் கதிரி
னாற் பொழியா, வாங்கதி னிழலைப் பொருந்
தியங் நிழலை யலர்முகி லான்மறைத் தளித்
தே, தூங்கிம கரத்தால் வெங்கதி ரானீர்
தொலைத்ததைத் தன்னொடாக் குதல் 45
போல்.

போற்றிறை மாயாசத்தியோ டொன்
றிப் போலிந்தசிற்பிரதாந மதனாற், சாற்றரு
நிமித்த காரண னாகித் தகுஞ்சடப் பிரதாந
மதனா, லாற்றுபா தாந காரண னெனநின்
றாக்கிய புத்தியா திகளிற், றோற்றுபூ சீவ
ரூபமாய் வினையாற் சொற்றபோத் துருவெ
ன நின்றே. 46

நியமசத் தியினாற் போகபோத் துரு
வை நியமஞ்செய் துருத்திர வுருவான், மய
முறு மாயா காரியஞ் சிதைத்து வந்தரு ளா
ரிய வுருவா, லயர்வுறு சீவன் றன்னையே
தன்னோ டயிக்கமாக் குவனென வறிக,
வுயர்வுறு சமட்டி வியட்டியென் பனவா 47
லுயிரிறை கட்குறும் பேதம்.

மிகுமரப் பன்மை தண்டலை யெனல்
போன் மிகுமுயி ரெலாமுனா னெனுமோர்,
தகுமபி மாந மிறைசமட் டியதாந் தனித்
தனி மரம்பெயர் கொளல்போற், பகுமுட
றோறும் வேறுவே றாகப் படுமபி மாநமோ
ர்ந் துரைப்பிற், றொகுமுயிர் வியட்டி யுருவ



மென் குவர்மேற் றொரும்பத விலக்கிய முறை 48
ப்பாம்.

சீவனென் றிடுமூ வகையதிட் டாந
ன் சேதந னந்தரி யாமி, யாவலி னநுசந்
தாத்துருச் சுயஞ்சத் தார்த்தனே டவச்சிந
ன் சீவன், தாவரும் பார மார்த்திகன் றுரி
யன் சான்றினன் பிரத்திகாந் மாவா, லேவ
மி றொரும்ப தத்திலக் கியார்த்த னென்பகூ 49
டத்தநா மங்கள்.

ஈசனென் றிடுமூ வகையதிட் டாந
னியம்பரு மொருபரப் பிரமம், பாசமில் பர
தத் துவம்பரமாந்மாப் படியிலா விசுத்தசித்
தின் றிப், பேசுதற் பதலக்கி யார்த்தனென்
பனமுற் பெறுபரி யாயநா மங்க, டேசுறு
பிரமந் தனக்கென வுரைப்பர் திருந்துநூ 50
றெரிதரும் புலவர்.

வடிவொடு பெயராற் குடமுத லாக
மண்பல வகைப்படு மதுபோற், சுடுபசும்
பொன்னே செயகையாற் பலவாஞ் சுடரி
ழையுருவுகொள் வதுபோற், படியறு சித்தே

முன்சொல்சீ வாதி பலவுமா மெனமுத
லாக, விடலரு மறிஞர் நூல்பல திருக்கு
விவேகமென் றியம்புறு மன்றே. 51

இந்துவினை யநாதியடைந் ததைமுழு
து மறையாம லிந்து தன்னா, லந்திறனை
யொளிர்வித்துக் கொள்களங்கமெனவெனை
யா னறியே னென்னு, முந்துலக விவகாரந்
தனிலுயிரை யடைந்ததனை மூடா தென்று,
மந்தவுயி ராலறியப் பட்டமென றம்பிக்கு மந்
தி ரம்போல். 52

விளங்குறுமாந் மாவுருவ மல்லாம
லான்மாவின் வேறாய்த் தோன்றா, துளங்
கொள்விய தாதிகா ரியங்கடமைத் தோன்
றும லொடுகி நின்றுந், துளங்கலக டிதக
டனை யெனுஞ் சமர்த்தை யாகியுமே தோன்
றா நின்ற, வளங்கடரு காரணமாய துவாகுந்
திரிசியமா மாயா சத்தி. 53

அனையதொரு மாயையிலக் கணமசத்
துச் சடந்துக்க மநித்தங் கண்ட, மெனு
மிவையுண் முயற்கோடு முதலசத்துச் சட



வுருக்கல்லெழுவாய் புத்தி, தனையடையுங்
கோரமொடு மூடவிருத் திகடுக்கந் தபுமெய்
யாதி, முனமுரைசெய் யநித்தங்கண் டிதங்
கா லபரிச்சேத முதல வாகும். 54

பிந்நமொட சத்துச்சா வயமுமெதிர்
மறையுமவை பிரிந்து தம்மின், மன்னியவு
மொழிந்தநிர்வாச் சியமாகு நவவிதமம்
மாயை யெய்து, முன்னலருஞ் சுருதிசம்
பந்தமுத்தி சம்பந்த முலக பந்த, மென்
னவரு ஞாநங்கண் முறையேயம் மாயைபடு
மியல்பு கூறில். 55

விண்ணின்மல ரெனத்துச்சமேயென
வு மிப்பிவரு வெள்ளி போல, வெண்ணும
நிர் வாச்சியமா மெனவுமுயிர் போனித்த
மெனவு நிற்கு, மூண்ணிலவு தமமாயை மோ
கமுடனவித்தைபொய்ம்மை யுருவியென்
றே, நண்ணுமிவை மாயாபஞ் சகமாகு மெ
னவறிஞர் நவில்வ ரன்றே. 56

சீவசே தநமறைத்துத் தமமயலா கிய
வுலகத் திறத்திற் கெல்லா, மேவுகா ரணமா

கி மாயைவிப ரிதஞானம் விளைத்து மோக,
மோவவுணர் வழித்தவித்தைசத் தின்வேறா
கிப்பொய் யுருவி யாகும், வீவிலா மாயையத
ற் கிருதருமஞ் சங்கோச விகாச மென்றாம்.

விரிந்தபட மோவியங்கள் பலதிகழ்த் திக்
குவித்தொடுக்கும் விதமே போல, வரந்தை
தரு மாயையுந்தன் விகாசதரு மத்தினா லகி
லங் காட்டிப், பரந்தவைகள் சங்கோச தரும
த்தா லடக்குமெனப் பகர்வர் மாயைக், கிருந்
தகுண மிரண்டுளதில் சுதந்தரமுஞ் சுதந்
தரமு மென்ன வன்றே. 58

பொய்யாகிச் சத்துருவப் பொருளின்
வே றாகியொரு பொருளாய்த் தோற்றல்,
செய்யாமை யாலுள துல் சுதந்தரஞ்சான் றா
யவொரு சேதனன்பா, லுய்யாத சீவாதியாக்
குதலாற் சுதந்தரமு முளது மாயை, மெய்
யான தலதென்றல் விசும்பலர்போ லில்லை
யென விளம்ப லன்றே. 59

புலமில்கந விடைக்கரிபோற் றோன்
றிவிசா ரந்தோன்றப் பொன்றும் பொய்யா



நிலவுதல்செய் சுத்தசத் துவவடிவ மாயை
யொடு நிகழ்த்து கின்ற, மலினசத் துவவடிவ
வவித்தைதமப் பிரதான வடிவ மாகு, நலமில்
பிர கிருதியென விருத்திமூன் றுடைத்து 60
முன நவின்ற மாயை.

மாயைவரு சுழுத்திலயங் களினத்தி
யாசயிக்க மாயிற் றுண்மை, யாயபிர மத்தி
னன வொடுபடைப்பி னிதுபேத வவத்தை
யெய்து, மேயவதிற் பிரமசை தந்நியம்
விம் பித்திதுவே விளங்கு ஞானத், தூயசை
தந்நியவீ சன்பதியென் றிடநிற்குந் துணி 61
வு தன்னால்.

அப்பரற் குபாதி யாகிய மோககா ரணி
யா மாயை, பொய்ப்புறு மவித்தை யெண்
ணிற் போத்துருப் பசுவென் றோது, மொ
ப்பருஞ் சீவர்க் கெல்லா முபாதியாய் மோ
கஞ் செய்யு, மெய்ப்புறு பகுதி பாச மெனக் 62
குணச் சமமாய் நின்று.

அவித்தையின் விம்பித் துள்ள வாரு
யிர் நுகர்ச்சிக் காகத், துவக்குறு காரி யங்க

டோற்றிட வெதிர்கு றித்த, வுவப்புறு மீச
ஞேக்க மாத்திரத் துற்ற லர்ந்து, பவப்படு
கால மாகி யதுகொடு பரிணு மித்து. 63

இருமக தத்து வந்தா னெனநிற்கு மது
தா னீர்பெய், தரும்விதை முளையா மன்
முன் போலிரா தமர்தல் போலக், கருமே
னும் பகுதி யோடாங் காரமு மாகா மற்
பொய், யுரமுறு நீருவி கற்ப வுருவடு வவத்
தை யாகும். 64

தோன்மக தத்து வந்தான் குணபேத
முறுப்பொய் ஞாந, மன்சவி கற்ப மாக வரு
முத லத்தி யாச, மென்முத லாங்கா ரந்
தோன் றிடுங்குண சத்து வந்தான், பின்
வரு மிராச தஞ்சொற் பெருந்தமோ குண
மென் ருகும். 65

உரைப்பருஞ் சத்து வாதி யுருவங்கள்
பிரகா சம்பின், புரைப்பிர விருத்தி மோக
மென்குவர் புகல்கு ணங்க, ணிரைப்பெயர்
தான்வை காரி நிகழுந்தை சதம்பூ தாதி, வி
ரிப்பருங் குணங்கண் மூன் றுந் தருவமேல்
விளம்ப லுற்ரும். 66



சத்துவ குணத்திற் ருேன்றுந் தயங்கு
முட் கரண நான்கும், புத்தியிந் தியங்க
ளைந்தும் போந்துதித் திடுமி ராச, தத்தில்
வாக் காதி யைந்துந் தரும்பிரா ணுதி யைந்
து, மத்தமோ குணத்திற் ருேன்று மகல் 67
விசும் பாதி பூதம்.

அப்பெரும் பூதம் பஞ்சீ கரித்துல காகி
நிற்குஞ், செப்பிய கரண நான்கின் செயல்
களா நினைத்த லந்தப், பொய்ப்பொரு டுணி
தன் மாநம் புரிதல்சிந் தித்த றிங்க, டிப்பிய
நான்மு கன்சேத் திரிபுராந் தகன்றே வன் 68
றே.

இக்கர ணங்க டான மிதயஞா நேந்தி
யங்கட், குய்க்குறுந் தொழிலாங் கேட்ட
லுறல்காண்ட லுண்டன் மோத்த, றிக்குமா
ருதமே நன்மித் திரனுயர் வருணனேடு, தக்
கசு வசியாந் தெய்வந் தாநங்கா தாதி யாமே.

புத்தியிந் திரியங்க டாமுணரும் விட
யம்புறமெனவே யுள்ளுமுணர்ந் திடுஞ்செவி
கள் புதைப்பி, னுய்த்தபிரா ணுதியொலி

கேட்கையங்நா திகளை யுண்ணும்போ தழல்
குளிர்ச்சி யறிதல்விழி மூடின், மெத்துமக
விருளறித லுட்காரா திகளின் விளங்கு
சுவை கந்தமறிந் திடன்முறையே யாகும்,
வைத்தகரு மேந்திரியத் தொழிலுரைத்த
னடத்தல் வழங்கல்விட லாநந்தித் திடுச
லெனவறியே. 70

அங்கிமக பதியிரவி யுடன்மிருத்து பிர
சாபதிதெய்வம் வாய்முதலாங் கோளகை
கடான, மிங்கிவையு ளுட்கரண மிருவகை
யிந் திரியமென்னவரு பதினான்குமத்தியா
ந் மிகமாந், தங்குமிவற் றுறுவிடய மாதி
பௌ திகமாந் தகுமதிதே வதையாதி தெய்
வீக மாமிப், புங்கவரே யிந்திரியம் விராட்
புருடற்கதுமெய் பொன்கர்ப்பற்கதுமறைப்
பா மந்தரியா மிக்கே. 71

நின்றிதயந் தனையடைந்து பிராணனுசு
வாச நிசுவாச மியற்றுமபா னன்குதத்தி
னுற்றுச், சென்றொழிய மலசலங்க ளொழி
த்தலுறுஞ் சமானன் சேர்ந்துந்தி யங்கரச



முறுப்பனைத்தும் பகுக்கு, மென்றுமுதா
னன்களமுற் றுற்கா்ரம் புரியு மிருந்தங்க
மெங்கும்வியா னன்பரிக்கு முடம்பைக்,
குன்றுதவி னுகன்சோம் பாவித்தல் விளைக்
குங் கூர்மனுல் விச்சலொடு தேக்குளவா
மன்றே. 72

தும்மலுட னிருமல்வருங் கிரிகரனு
னகுதல் சொல்லுதலாந் தேவதத்த னற்
சோக ராக, மிம்மைதருந் தனஞ்சயனத்
தனஞ்சயனும் வாயு விறந்தவைந்து நாள்
காறு மிருந்துநனி வீங்கி, மெய்ம்முழுதும்
வெடித்திடச்செய் தகலுநா காதி விளம்பு
புற வாயுக்க டாங்கருமேந் தியங்க, டம்மை
மிக வியக்கலுறும் பிராணாதி வாயுத் தாமி
யக்கும விடாமன்னு நேந்திரியங் களையே.

சாற்றின்வயி ரம்பன்முக் கியன்பிரபஞ்
சநனந் தரியாமி யொமெகாப் பிராணனெ
னும் பெயர்கொள், காற்றிவைகள் சீவசம்
பந்தமா யேயுட் கரணங்க ளியக்கியிடு மண்
முதலைந் திற்கும், பாற்றிகழும் வியாபாரம்
பொறைபிண்டி கரணம் பாகமொடு விரக

மிடங் கொடையாகுந் தரும, மாற்றலுறு திண்மைநெகிழ் வழற்சிபரி வெளியா மய னொடரி யரனீசன் சதாசிவன்றே வதை கள். 74

கந்தமுத லாயினவே குணங்களவை தம்முட் ககநத்திற் கொலியொன்றே வளி க்கிரண்டே றுடனே, யந்தழலுக் கொளியொ டு மூன் றறற்கிரத மொடுநான் கைந்துமண மொடுபுவிக்கென் றறிகதிரி புடிதான், மூன் றுஞா துருஞாந ஞேயமா மவற்றுண் மூல வகங் காரஞ்சேர் சீவசை தந்ய, நந்துஞா துருமநத்திற் கதுவறிவு ஞாந நவின்ற பௌதிசவிடய ஞேயமென வறியே. 75

ஈங்குமந மிருபத்து நான்காவ தாகு மிரு பத்தைந் தாவதுதான் மூலவகங் கார, மாங் கதனை யடைதலுறுஞ் சிதாபாச சீவனறை யுமிரு பத்தாறு மவன்மாயை மருவு, மோங் கொளியா மீசனிரு பத்தேழா மவனவ் வுயிர் முதலாந் துரியனிருபத்தெட்டா மவனு, னீ ங்கலரு மீசனதிட் டாத்துருவாம் பிரமநிகழ் த்திலிரு பத்தொன்ப தாவதுவா மன்றே.



நேரித்தகா ரியத்தோற்ற மிருவகை யாங் கிரம சிருட்டியுக பற்சிருட்டி யென மூலப் பகுதி, விரித்தமக தத்வமக முந்தன் மாத் திரையாம் விளங்குசத்தப் பிரகிருதி யாற்பஞ்ச பூத, முரைத்தவற்றுற் பிரமாண் ட பிண்டமுத லாய வுலகுதயந் தான்கிரம சிருட்டிநிறை கடலான், மருத்துவசத் தலை யாதி போற்சிவத்தின் மாயா மயநாம வுரு வநிகழ் வாமுகபற் சிருட்டி. 77

கருதிசித்த மாதலினை விவையுடம்பா டா குந் தூயபரப் பிரமமாம் விகாரமிலா விறை யாற், றருதலெங்ஙன் காரியங்கள் சடப்பகு தி யென்னிற் றுளிலாக் கதிர்ச்சிலையி லிச் சையிலா தெழுந்த, பருதியினு லழல்வரல் போற் பரசிவனுன் மூலப் பகுதியிடை மக தாதி காரியங்கள் வரற்குத், கருதின்முர ணிலையாகு மெனப்புகல்வ ரறிஞர் காரியங்க டோற்றுதனல் வகையவையீண் டுரைப் பாம். 78

விருத்திபரி ணமமா ரம்பம்விவர்த் தக மாம் விரிந்தபடங் குடில்பாவம் பாறயிரா கார

முரைத்தலுறு தந்துபட ரியாயம்வன் பழு
தை யுரசவுரு முறையவற்றின் றிட்டாந்த
மாகும், வருத்துகயிற் றரவங்கக் தருவநகர்
குற்றி மகன்கநவிற் றிரசாலஞ் சுத்திகா ரச
தங், தெரித்தவிவை முதலனவாங் திரித
வின்மெய்ப் பொருளிற் றிரிந்திடுபொய்ப்
பொருளதுகற் பிதமாதற் குவமை. 79

பொய்ப்பொருள்கற் பிதமாயிற் றவிகா
ரி யாகப் பொருந்துமுயி ரிடத்தேன்முன்
பிராந்தியார்க் கென்னி, லொப்பில்சதி பதிர
திமா லுருவச்சொற் பநந்தா னொருமுநி
வன் பாலுதிப்பி னதனலங் கவனுக், கெப்ப
ழுது மிலாததுபோற் சான்றுமாங் மாவிலில
ங்குகுண வுருவமாம் பகுதியினன் மருளு,
மெய்ப்பரிய ஞாதுருவும் பிராந்திஞா நமும்
பொய் விடயஞே யமும்வரினு மவர்க்கிடை
யூறிலையே. 80

இறைவனற் றோன்றியமா யாமயமா
மூலக மிருந்தபடி யிருக்குந்தன் வடிவினு
லதனுண், மறைவிலாச் சீவபுத்தி விருத்தி



கற் பிதமா மற்றொருபோக் கியவடிவ மே
விருப்பு விடயம், வெறுவிதாம் வெறுப்பு
விட யத்தினொடு நொதுமல் விடயமெனப்
பலவிதமா மவையானவை யென்னின், முறை
யின்வரி தாதிபுலி யெழுவாய்வீழ் துரும்பு
முதலனவா மெனமொழிவர் முற்றுமுணர்ந்
துடையோர். 81

ஈசனிரு மிதமான வேகாகா ரமும்பி
னெய்துமுயிர்க் கற்பிதமாம் பலவாகா ரமு
மோர், தேசவிட யத்துறுதற் கெவ்வாறிங்
கென்னிற் றிட்டாந்த மீசனிரு மிதமணியா
திகடாம், பேசிலொரு தகையாய்ப்போத்
துருப்புத்தி தன்கற் பிதநாநா விதத்தினு
லவைதமைபெற் றோனுக், காசைவிட யம
தாகிப் பெருற்குவெறுப் பாகி யரியதுற
விக்குபேட் சாவிடய மாமே. 82

அப்பொருடான் விளங்கித் தோன்றுறு
வதற் கின்னு மறைதுமொரு திட்டாந்தந்
தோன்றியவோர் மாது, மெய்ப்பரிசோர்
திறமாகப் போத்துருக்கள் புத்தி விருத்தி

கற்பிதத்தினூற் ருதைக்கு மகளாய்த், தப்
பில்கொழு நற்குக்கா தலியாகி மகற்குத்
தாயாகி மாதுலற்கு மருகியா யிருப்ப, ளிப்
பரிசு விடயமெலா மிறைவனிரு மிதமு மில
ங்குயிர்க்கற் பிதமுமா மிருதிறத்துற் 83
றிடுமே.

அண்ணனிரு மிதப்பிரபஞ் சந்தான்வா
திப்ப தல்லாமை யானுநூ லாசிரிய வடிவா
ய், நண்ணலரு முத்திசா தனமாயுந் தன்னு
னழுவவொண்ணு மையினுனு மனையதுதா
னிற்க, வெண்ணரிய சீவகற் பிதமாய வது
தா னிருபிரபஞ் சங்கள்சாத் திரத்தொட
சாத் திரமாங், கண்ணுமசாத் திரப்பிரபஞ்
சங்கொலிரு திறனுங் கழறிற்றீ விரமந்த 84
மெனவவையீண் டுரைப்பாம்.

சீவபர விசாரணையே யுரைத்தலரி
தாஞ்சாத் திரப்பிரபஞ் சங்காமா திகளேதீ
விரமாங், காவலுறுஞ் சாதிகரு மாதிகமொ
டேதன் கருதுமசுக் கற்பிதமே மந்தமசாத்
திரத்தின், மேவுறுமவ் விருதிறனு மாருயிர்
மெய்க் காட்சி விரோதிகளா தலின்ஞானம்



பயிறற்கு முன்ன, மோவுவசாத் திரப்பிர
பஞ் சந்தான் மெய்ஞ் ஞான வுதவியா யாங்
மக்காட் சிப்பின்விடு வதுவாம். 85

தீவிரமந் தங்களுயிர்க் காட்சியுற்ற பின்
னுந் திகழ்முத்தி பெறற்பொருட்டு விடுவன
வென் றறிக, பாவமுறு மவச்சின்னோ பாதி
பதி விம்போ பாதியுட னத்தியா சோபாதி
யெனவே, மேவுமுபா திகளொருமூன் றுள
வற்றை முறையே விளம்பிடியிற் சுழுத்தி
யுரு வாமவித்தை தானே, யாவரண வவச்
சின்னோ பாதியாம் பிரத்தி காங்மாவுக் கத
னதுகா ரியமாம்புத் தியினில். 86

பற்றியவாங் மாப்பதிவிம் பித்திடுத
ருனே பதிவிம்போ பாதியாம் புத்திகத
மாய, முற்றுசுக துக்கங்க ளுயிர்நுகர்தல்
போல முயலுதலே யத்தியா சோபாதி யா
கு, முற்றவத்தி யாசவிலக் கணமாம்வே
றொன்றை யொன்றாகக் கருதலிப்பி வெள்
ளியது போல, மற்றதுநால் வகைப்படுமால்
மித்தையுட னிதர மற்றிதரே தரஞ்சத்தி
யங்களினு லன்றே. 78

நெருப்பினெடு புணர்ச்சியாற் புனற் கழற்சி வரல்போ னித்தமுறு மாங்மசந் நிதி யதனின் முறையே, சரிப்பினெடு காண்ட னினை வுறலறிதல் வரலாற் றகுந்தூல மெய் மித்தியாத்தியா சந்தா, னிருப்பருமிந் தியங் களே யிதராத்தி யாச மிதரேத ராத்தியா சங்கரண மாகுந், தரிப்பரிய மூலவகங் கார மது தானே சத்தியாத் தியாசமெனச் சாற் றுவர்தக் கவரே. 88

ஆங்கார மாங்மாவிற் குானெனலாற் கயிற்றி னரவமென நிருபாதி காத்தியா சந் தா, ஞங்கார வியலாங்மா விற்குான் கருத் தா வாமெனலாற் சிவப்புவலம் போற்சோ பா திகமா, மீங்காகுங் கரண தரு மாங்மாவிற் கிச்சை யினேனுனென் றிருத்தலினு லலை புனலிற் புக்க, வீர்ங்கதிரின் விம்பமெனத் தத்தருமாத் தியாச மெனவுரைப்பர் நான் குடும்ப வானெனநிற் கையினல். 89

மைந்தர்முத லாயினு ருடனுங்மா விற் கு மண் ணுலகிற் பஃறியத்த விவகார மென



வே, யந்தமுறு சம்பந்த மாத் திராத் தியாச மாமென்ப ரிவ்வத்தி யாசங்க டம்மா, னந்து நிரு விகாரியாங் மாவென்றல் பெற்று நவி றருமைந் தவத்தையுள வவையாவை யென் னிற், றெந்தமுறு நனவொடுசொற் பநஞ்சு ழுத்தி துரியந் துரியாதீ தந்தானு மவற்றி யல்பு மொழிவாம். 90

பெருந்தூல வைம்பூத மீரைந்திந் திரி யம் பிராணபஞ் சகமொடுநாற் கரணமிவை யுருவா, மருந்தூல சரீரத்திற் சாத்துவித கு ணமோ டகரமெழுத் தரிதெய்வம் விழியிட மேயாக, விருந்தாக விதயமல ரட்டதள கதி யில் விசுவசீ வனும்விராட் டிறையுமொருங் கடைந்து, வருந்தாவில் விடயங்கள் கரண மனைத் தானு மருவிநுகர்ந் திடுதல்சா கரண மா மன்றே. 91

பஞ்சபூ தமுஞ்சித்த புத்தியுமின் றெ ழிந்த பதினேழின் மயமாஞ்சூக் குமதநுவி னின்றும், விஞ்சுரசோ குணமுகர மெழுத் ததிதெய் வந்தான் விரிஞ்சனிடங் களமாக

நல்விதய மென்னுங், கஞ்சமலர்க் கன்னிகா
கதியாற்றை சதனுங் கநககர்ப் பனுமருவி
நனவின்வா தனையை, நெஞ்சமெனுங் கரண
த்தா லநுபவிக்கை தானே நிகழ்ந்திடுஞ்
சொற் பநமென் றுநிகழ்த்துவர்மூ தறிஞர்.

மேய்ந்துதிரி பார்ப்படக்கி யுறங்களகு
போலவிரிந்தகா ரியங்களையுட் கொண்டுவா
தனையோ, டாய்ந்தவாங் மாசிரயத் தவத்தை
யற விருக்கு மரும்பகுதி மயமாங்கா ரண
வுடம்பிற் றமமே, யேய்ந்தகுண மகரவெ
ழுத் தரன்றெய்வ மிதய மிடமாகக் கமல
மலர்ப் பொகுட்டுநடுக் கதியா, லோர்ந்த
பிராஞ் ஞனும்பரனு மாய்ப்பிரமா நந்த
முறுமாயா விருத்தியெனு நுண்கரணந்
தன்னால். 93

அநுபவித்தல் சுழுத்தியா மின்னன
வாதிகண்மூ வவத்தையொடு முத்தாம மூப்
புரமுத் தாநம், பினுமுத்தே யங்களெனும்
பரியாய நாமம் பெறுமுரைத்த சாக்கிரத்
தே யககமல மழித்து, மநவழக்கந் தவிர்ந்து
பரந் தனைச்சிந்தித் திடலே வருந்துரிய மப்



பரமாந் மாவிந்மந மடங்கன், முனமுரைத்
தல் செய்துரியா தீதமெனப் புகல்வர்
மொழிந்தவற்றுட் டாவரங்கள் பெறுத
விருட் சுழுத்தி. 94

விலங்குமுத லனபெறுவ சுழுத்தி
யொடு கநவால் விண்ணவர்க்கு நனவுநராக்
கம்மூன் றுமாகுங், கலங்கலறு மருளர்க்குத்
துரியமகா யோகி கட்குவரு வதுதுரியா
தீதமுதன் மூன்று, மலங்கலுழு மநுடர்க்
குத் தமிற்றுமே தோன்றி வரும்பந்த மா
மேனை யிரண்டுமியோ கத்தர், விலங்குமுத்
தி சாதநமா மவையொன்றி லேயொன் றி
லாமையாற் காலதே சங்கணிய மம்பொய்.

சொற்றவவத் தைகளிலநு சூதனு
யறியுந் துரியனே யுளனநவு கநவிலறி
வுண்மை, பெற்றனமச் சுழுத்தியினிற் பெ
றலுரைப்பி னெழுந்து பிறிதொன்று மறி
யாது சுகத்துறங்கி னேனெனன், றுற்றவிரு
நினைவுமநு பவஞ்சுழுத்தி யதனி லுற்று
வரா வெனுமருத்தா பத்தியினாற் பொருள்

